உ

| ஓம் நம : சிவாய ||

ஓம் நமோ பகவதே ஹரதத்தாய

**சேக்கிழார் காவ்யம்**

# கண்ணப்ப நாயனர்

( சில புதிய கருத்துக்கள் )



எழுதியவர்

**திருவையாறு அண்ணுஸ்வாமி சிரௌதிகள்**

வெளியீடு நன்னுள்

ஸ்ரீ குரோதி ஸூ தைமீ 29உ (11-2-65) வியாழக் கிழமை

முதற்பதிப்பு — 1000 பிரதிகள்

விலை 30 காசு ; தபாற் சிலவு 5 காசு

வெளியிடுபவர் :

தி. வி. அண்ணுஸ்வாமி சிரௌதி

பணியாளர், ஸ்ரீ ஹரதத்தர் பக்த ஜன ஸபை

கோட்டூர் அக்ரஹாரம், துகிலி போஸ்ட்டு

நரசிங்கம்பேட்டை வழி, தஞ்சாவூர் ஜில்லா

# அன்புருவர் கண்ணப்பர்



ஈச்வரன்: நில்லு கண்ணப்பா! நில்லு கண்ணப்ப!!
நில்லு கண்ணப்ப!!!.

## ஈச்வர, குரு வணக்கம்

(1) தக்ஷிணுமூர்த்தி

குரவே ஸர்வ லோகானும் பிஷஜே பவரோகிணும் |
நிதயே ஸர்வ வித்யானும் தக்ஷிணு மூர்த்தயே நம ; ||

(2) நடராஜர்

உலகெ லாமுணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்

(3) சைவ ஸமயாசார்யார்கள்

பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல் போற்றி
ஆழிமிசைக் கல்மிதப்பில் அணைந்தபிரா னடி போற்றி
வாழிதிரு நாவலூர் வன்தொண்டர் பதம் போற்றி
ஊழிமலி திருவாத வூரர் திருத் தாள் போற்றி.

(4) சைவ ஸ்தாபனுசார்யவர்யர் ஸ்ரீ ஹரதத்தர்

அறுகுண பூர்ணனுவான் அருமறை வணக்கம் கூறி
முறையிடு மீசன் த்யானம் மூவெழு யாகங் கட்கும்
இறை பர மேசன் என்றும், மறைமொழி காயத்ரீயும்
பிறையணி பவனைப் போற்றும் பெருமைகள் பலவும் சொன்ன
குருஹர தத்தா சார்யர் திருவடி தலைமேற் கொள்வாம்.

(5) அடியார்கள், சேக்கிழார்.

தில்லைவா ழந்தணரே முதலாகச் சீர் படைத்த
தொல்லையதாந் திருத் தொண்டத் தொகையடியார் பதம் போற்றி
ஒல்லையவர் புராண கதை உலகறிய விரித்துரைத்த
செல்வமலி குன்றத்தூர் சேக்கிழார் அடி போற்றி

# முகவுரை

சிவமயம்

## சேக்கிழார் பெருமான் காவ்யம்-வெளியீடு-2.

## கண்ணப்ப நாயனார் சரித்திரம்

சிறுத்தொண்ட நாயனார் சரித்திரக் குறிப்புகள் முதல் வெளியீடாக வந்தது. இந்த இரண்டாவது வெளியீட்டில் கண்ணப்ப நாயனார் சரித்திரத்தில் சில புதிய கருத்துக்களை விளக்கியிருக்கிறேன்.

திரு ஸி. கே ஸுப்ரமண்ய முதலியார் அவர்களின் தமிழ் பாஷை ஞானம், இலக்கண ஞானம், வடமொழி ஞானம், ஸித்தாந்த, சாஸ்திர ஞானம் கலைஞானம், சிவனடியே சிந்திக்கும் சிவஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம் முதலிய ஞானங்களில் கோடியில் ஒரு பங்கு கூட எனக்கு இல்லை யென்பதை யுணர்வேன். ஆயினும் சில இடங்களில் அவர் கருத்துகளுக்கு மாறாக எனக்கு உதித்தனவற்றை ஈச்வரனருளே யென்ற பூர்ண நம்பிக்கையுடன் வெளியிடுகிறேன். வித்வான்களும் சிவ பக்தர்களும் இந்த அபிப்ராயங்களை ஆராய்ந்து பார்த்து தோஷமில்லை யென்று மனதில் பட்டால் ஏற்றுக் கொள்வார் களாக.

சேக்கிழார் பெருமான் காவ்ய மகிமையும், அடியார் பெருமையும் மேன்மேலும் திகழவேண்டுமென்ற ஆர்வத்துடன் எழுதி வருகிறேனேயன்றி. ஒருவரையும் குறை சொல்லும் நோக்கத்துடன் அல்ல.

இதே முறையில் மற்ற அடியார்களின் சரித்திரக் குறிப்புகளும் வெளிவரத் திருவருள் புரியவேண்டுமென்று பரமேச்வரனைப் பிரார்த்திக்கின்றேன்.

சிறுத்தொண்ட நாயனார் சரித்திரக் குறிப்புகளைப் படித்த பல அன்பர்கள் நாயனார் சரித்திரத்தையும் சுருக்கமாகப் போடும்படி பணித்தார்கள். அளவிடமுடியாத பெருமைகளையுடைய அடியார் சரித்திரங்களைச் சொல்வதென்றாலே அபார ஞானம் வேண்டும், பெருமைகள் குறையாமல் சுருக்கமாகச் சொல்வதென்றால் மேலும் அதிக ஞானம் வேண்டும். கொஞ்சமும் யோக்யதையில்லாத நான் சொல்லத் துணிவது பிழையென்றாலும், அன்பர்கள் பணித்ததற்காக தெரிந்த அளவில் சுருக்கமாக எழுதியிருக்கிறேன். குற்றங் குறைகளை நீக்கி அன்பர்கள் அமைத்துக் கொள்வார்களாக.

இப்புத்தகம் வெளிவருவதற்கு ஒரு மெய்யன்பர் தாமாக முன்வந்து மனமுவந்து பொருளுதவி செய்திருக்கிருர். அவ் வன்பருக்கு எனது தாழ்ந்த வணக்கமும் மனமார்ந்த நன்றியும். அன்னுரின் திருநாமத்தை நினைக்குந்தோறும் அடியேன் ஏக காலத்தில் மெய்ப்பொருள் நாயனுர் கண்ணப்ப நாயனுர் இருவர்களுடைய நாமங்களையும் போற்றிய புண்யம் எய்து கின்றேன்.

ஸ்ரீ குரோதி ஞ தைமீ 29வ
குருவாரம், மிருகசீர்ஷம்

தி. வி. அ. சிரெளதி

# முன்னுரை

பரமேச்வரனுடைய திருவடிப் பேற்றை அடைவதற்கு மூன்று விதமான வழிபாடுகள் சாஸ்திரங்களில் பேசப்படு கின்றன. (1) குருவழிபாடு (2) லிங்க வழிபாடு (3) ஜங்கம வழிபாடு.

"ஆசார்ய தேவோ பவ" என்னும் வேத விதியை அனு ஸரித்து சைவஸமயாசார்யார்கள் நால்வரில் ஒருவரான திரு நாவுக்கரசு சுவாமிகளையே குருவாக வழிபட்டு அப்பூதியடிகள் ஈச்வரர் கிருபைக்குப் பாத்ரராகி அறுபத்து மூவரில் ஒருவராய்த் திகழ்கின்ருர்.

(2) லிங்க வழிபாடு :—கண்ணப்ப நாயனுர் சிவலிங்கத் திருமேனியை வழிபட்டு ஆறே நாட்களில் ஈச்வரானுக்ரஹத் தைப் பெற்ருர்.

(3) ஜங்கம வழிபாடு :— சிவனடியார்கள் எல்லாரும் நடமாடும் தெய்வம். பல அடியார்கள் சிவனடியார்களை வழி பட்டு ஈச்வர க்ருபையைப் பெற்றிருக்கிருர்கள்.

சிவனடியார்களை முன்னுட்டிப் பின் உண்ணும் நெறியில் நின்ற சிறுத்தொண்டர் பெருமையை முதல் வெளியீட்டில் சிறிதளவு அனுபவித்தோம். சிவலிங்க வழிபாட்டால் ஈச்வரா னுக்ரஹத்தைப் பெற்ற கண்ணப்ப நாயனுர் சரித்திரத்தில் சில புதிய கருத்துக்களை இந்த வெளியீட்டில் அனுபவிப்போம்.

தி. வி. அ. சிரெளதி

## திருக்காளத்தி மலை

(திருஞான) 5-ம் திருமுறை. பண் - ஸாதாரி. திருவிராகம்

வேயனைய தோளுமையோர் பாகமது வாகவிடை யேறி சடைமேல்
தூயமதி சூடிசுடு காடுநட மாடிமலை தன்னை வினவில்
வாய்கலச மாகவழி பாடுசெயும் வேடன்மல ராகு நயனம்
காய்கணையி னாலிடந் தீசனடி கூடுகா ளத்தி மலையே

## காளத்தியப்பர் - ஞானப்பூங்கோதை

அப்பர் ஸ்வாமிகள் - 6-ம் திருமுறை - திருத்தாண்டகம்

தேனப்பூ வண்டுண்ட கொன்றை யான்காண்
திருவேகம் பத்தான்காண் டேனூர்ந் துக்க
ஞானப்பூங் கோதையாள் பாகத் தான்காண்
நம்பன்காண் ஞானத் தொளியா னான்காண்
வானப்பே ரூரு மறய வோடி
மட்டித்து நின்றான் காண் வண்டார் சோலைக்
கானப்பே ரூரான்காண் கறைக்கண் டன்காண்
காளத்தியா னவனென் கண்ணு ளானே

## திருக்காளத்தி - க்ஷேத்ர மகிமை

நக்கீர தேவர் 11-ம் திருமுறை

அறியா மலேனும் அறிந்தேனும் செய்து
செறிகின்ற தீவினைக ளெல்லாம்—நெறிநின்று
நன் முகில்சேர் காளத்தி நாத னடிபணிந்து
பொன்முகரி யாடுதலும் போம்.

## கண்ணப்பர்

நம்பியாண்டார் நம்பி – திருத்தொண்டர் திருஅந்தாதி

நிலத்திற் றிகழ்திருக் காளத்தி யார்திரு நெற்றியின்மே
லலத்திற் பொழிதரு கண்ணிற் குருதிகண் டுண்ணடுங்கி
வலத்திற் கடுங்கணை யாற்றன் மலர்க்கண் ணிடந்தப்பினன்
குலத்திற் கிராதனங் கண்ணப்ப னென்று கூறுவரே

---

79-5



# கண்ணப்ப நாயனூர் சரித்திரம்

## (சுருக்கம்)

திருக் கண்ணப்ப நாயனுர் பொத்தப்பி நாட்டில் உடுப்பூர் என்ற நகரில் அவதரித்தார். அந்நாட்டில் வேடர்கள் வாழ்ந்து வந்தார்கள். அவர்களுக்கு அரசன் நாகன் என்பான். அவன் மனைவியின் பெயர் தத்தை. வெகு நாட்களாகக் குழந்தை பிறக்காததால் அவர்கள் தங்கள் தெய்வமான முருகப் பெருமானை வழிபட்டார்கள். முருகப் பெருமான் அருளால் ஒரு ஆண் குழந்தை பிறந்தது குழந்தைக்கு திண்ணன் என்று பெயர் வைத்தார்கள், நல்ல திடசாலியாகவும் தைரியசாலியாகவும் திண்ணனுர் வளர்ந்து வந்தார். வில் வித்தையை முற்றும் கற்றுப் பதினறு வயது நிறம்பி இளஞ்சிஙகம்போல் விளங்கினுர்

அதுஸமயம் காடுகளில் துஷ்ட மிருகங்கள் அதிகமாகி உயிர்களுக்கும் பயிர்களுக்கும் கேடு விளைவித்தன. வேடர்கள் அரசனுன நாகனிடம் முறையிட நாகன் வயதாகி விட்டபடியால் குடிகள் ஸம்மதம் பெற்று தன் மகன் திண்ணனுர்க்கு முடிசூட்டி அரசுரிமையை ஒப்புவித்தான்; திண்ணனுர் வேடர்களுடைய துன்பங்களை நீக்கும் வண்ணம் வேட்டையாடக் கிளம்பினுர் (முதல் முதல் வேட்டையாடுவதற்குக் கன்னி வேட்டை என்று பெயர்) மிகவும் வெற்றிகரமாக வேட்டையாடி வரும்போது, ஒரு பெரிய காட்டுப்பன்றி கர்ச்சித்து ஓடத் திண்ணனுரும் அவருடைய மெய்க்காவலர்களான நாணன் காடன் என்ற இருவர்களும் அனேக மைல்கள் அந்தப் பன்றியைத் துரத்திக் கொண்டு ஓடினுர்கள், பன்றி மிகவும் களைத்துப் போய் ஓரிடத்தில் சற்று நிற்கத் திண்ணனுர் கத்தியின் ஓரே வீச்சால் பன்றியை இரு துண்டாக வெட்டி வீழ்த்தினுர். நாணனும் காடனும் அவருடைய வலிமையைக் கண்டு அதிசயித்தார்கள்; பக்கத்தில் ஸ்வர்ண முகி (பொன் முகலி) யென்ற நதியிருப்பது தெரிந்தது எல்லாரும் நதிக்கரை சேர்ந்தார்கள்

ஸ்வர்ண முகியின் மறுகரையில் திருக்காளத்தி மலையைத் தரிசனம் செய்தார்கள். திண்ணனுர் அம்மலையின் மீதேறிச் செல்ல விரும்பினுர். நாணன் மலையின் மேல் நல்ல காக்ஷி காணலாமென்றும் கோணமில் குடுமித்தேவர் இருப்பார், கும்பிடலாமென்றும் சொன்னுன், திண்ணனுர் காடனை இக்

கரையில் நிறுத்தி நெருப்பு உண்டாக்கி வைக்கும்படி உத்தரவு செய்து, நாணன் பின்தொடர ஆற்றைக் கடந்து மலையின் மேல் ஏறினர்.

மலையின்மேல் ஏறும்போது, திண்ணனுருக்குத் தன் மேலுள்ள பாரம் குறைந்து போவதுபோல் ஓர் இன்ப உணர்ச்சி யேற்பட்டது. மலையின் உச்சியை அடைந்ததும் முழு பாரம் ஒழிந்ததாக உணர்ச்சி ஏற்பட்டு ஆனந்தமடைந்தார். குடுமித்தேவரைக் கண்டார், காளத்தியப்பர் அருள் பார்வையால் திண்ணனுரின் பந்தவினைகள் நீங்கின. அன்பே உருவாக ஆனர். மிகுந்த ஆர்வத்துடன் ஓடிக் குடுமித்தேவரைத் தழுவிக்கொண்டு ஆனந்தக் கண்ணீர் பெருக்கினர். துஷ்ட மிருகங்கள் ஸஞ்சரிக்கும் இடத்தில் தனியாக இருக்கிருரே யென்று தவித்தார். எத்தனை நாட்களாகப் பசியால் வாடினரோ என்று ஏங்கினர்.

சிவலிங்கத்தின் மேலும், சுற்றிலும் பில்வ தளங்கள், மலர்கள் கிடந்ததைக் கண்டு நாணனைக் கேட்டார். அதற்கு முன் விஷயம் கேட்டறிந்த நாணன் தினம் காலையில் ஒரு பார்ப்பான் வந்து ஏதோ வார்த்தைகள் சொல்லி (மந்த்ரம் ஜபித்து) அபிஷேகம் செய்து, மலர்கள் தூவி, ஒரு பாத்திரத்தில் நிவேதனம் செய்து போவாரென்று சொன்னன். இந்த வார்த்தைகளே, ஈச்வர பூஜை முறையைப் பற்றித் திண்ணனுருக்கு உபதேசமாக அமைந்தன. காளத்தியப்பர் அருளால், கண்ணப்பருக்கு ஈச்வரனைப் பூஜை செய்ய வேண்டும் என்று ஆர்வம் பொங்கினது. ஈச்வரனைப் பிரிய மனமில்லையாயினும், ஈச்வரனைப் பூஜை செய்ய வேண்டும், ஈச்வரனுக்கு ஆகாரம் கொடுக்க வேண்டுமென்ற ஆசை மேலிட, விரைந்து கீழே இறங்கினர். ஆற்றைக் கடந்து காடன் இருக்குமிடம் சேர்ந்தார். காடன் நெருப்பு உண்டாக்கி வைத்து, பன்றியின் உருப்புக்களையும் வெவ்வேருகப் பிரித்து வைத்திருந்தான்.

திண்ணனர் நல்ல மாம்சத் துண்டங்களைத் தானே, கோலினிற் கோத்து, நெருப்பில் காய்ச்சிப் பதமாக்கி, நாவினில் பழகிய இனிமை பார்த்து, நல்ல ருசியுள்ள பாகங்களை மாத்திரம் ஒரு தொன்னையில் சேர்த்தார். ஸ்வர்ணமுகியில் ஸ்நானம் செய்து, வாயினில் நீரை எடுத்துக்கொண்டார். பக்கத்தில் இருந்த சில பச்சிலைகள், மலர்களைச் சேகரித்துத் தலையில் சொருகிக்கொண்டார். மாம்ச தொன்னையை வலது கையில் எடுத்துக்கொண்டார். இடது கையில் வில், நாணனையும் காடனையும் மறந்தார்.

வாயினில் நீர் (அபிஷேகம்), தலையில் பச்சிலை, மலர்கள் (அர்ச்சனை) வலது கையில் ருசிபார்த்த மாம்சம் (நிவேதனம்) இடது கையில் வில்லும் அம்புமாகக் காளத்தியப்பரைப் பூஜை செய்ய மிக வேகமாய் ஏறிச் சென்றார். திண்ணனார் கண் களுக்குக் காளத்தியப்பர் பசியால் மிகவும் வாடி இளைத்தனர் போல் தோன்றினார். மிகவும் பரபரப்புடன் பூஜையை ஆரம் பித்தார்.

காளத்தியப்பர் எதிரில் நின்று, சிவகோசரியார் செய் திருந்த பூஜையின் நிர்மால்யங்களைத் தம்முடைய பாதுகைக் காலால் ஒதுக்கினார். பிறகு தம் வாயில் எடுத்துச் சென்ற நீரை அன்பு உமிழ்வார்போல் அபிஷேகம் செய்தார் தலையிற் சொருகியிருந்த பச்சிலை மலர்களைத் தலை வணங்கிச் சாத்தினார். கடைசியாக மாம்சத்தை எதிரில் வைத்து, அன்பு மொழிகள் சொல்லி, சாப்பிடும்படி வேண்டினார்; உபசரித்தார். அமுது செய்வித்தார்.

இவருடைய பக்திச் செயல்களை யெல்லாம், பரிசுத்தமான ஆகம முறைச் செயல்களாகவே காளத்தியப்பர் ஏற்றுக்கொண் டார். பொல்லாப் பிள்ளையார் நம்பியாண்டார் நம்பியின் பிரார்த்தனையின்படி அவர் உபசரித்த நிவேதனத்தை யேற்றுக் கொண்டதுபோலவே, காளத்தியப்பரும் கண்ணப்பர் பக்தி மேலீட்டால் உபசரித்த மாம்ச நிவேதனத்தை ஏற்று உட் கொண்டார். முழுதும் ஏற்று, உட்கொண்டது கண்டு நாய னாருக்கு நல்ல பசிபோலும், "இனிய நல்லூன் இன்னமும் வேண்டும்" என்று முடிவுக்கு வருகிறார். மறுநாள் இன்னும் கொஞ்சம் அதிகமாகவும் ருசிகரமாகவும் கொண்டுவர வேண்டு மென்று தீர்மானிக்கிறார்.

திண்ணனார் தன் பசியை மறந்தார்; தன்னை மறந்தார். புற உலகத்தையும், மறந்தார். இரவில் துஷ்ட மிருகங்களால் ஈச்வரனுக்கு ஒரு ஆபத்தும் வரக்கூடாது என்று கையில் வில்லேந்தி இரவு முழுதும் காவல் புரிந்தார். பொழுது விடிந் ததும், காளத்தியப்பருக்கு அன்றைய தினம் பூஜை செய்யவும், ஆகாரத்தை எண்ணியும் கீழிறங்கிச் சென்றார்.

சிறிது நேரத்திற் கெல்லாம் ஆகம முறைப்படி பூஜை செய்யும், சிவகோசரியார் வந்தார். ஈச்வரனுடைய லீலையால் அவருடைய கண்களில் மாம்ச துண்டங்கள், நரம்பு, எலும்புகள் சிதறிக் கிடப்பதுபோல் தோற்றம் பட்டது. மனம் வருந்தினார். யாரோ ஒரு வேடுவன்தான் அசுத்தம் செய்திருக்க வேண்டு

மென்று ஊகித்தார். மேலே பூஜை நடக்கவேண்டுமே, எல்லா வற்றையும் அகற்றி, முறைப்படி ஸ்தல சுத்தி செய்து, மறுபடி ஸ்நானம் செய்து வந்து பூஜையை முடித்துச் சென்ருர்.

நாணனும் காடனும் திண்ணனுர் உலகை மறந்து குடுமித் தேவருக்கே ஆட்பட்டாரென்று கண்டு, அரசனிடம் தெரிவிக்க லாமென்று தங்கள் நகர் சென்றுவிட்டார்கள்.

திண்ணனுர் முந்திய நாளைவிடப் பன்றி, மான், கலை, மரை, கடமை முதலிய பல மிருகங்களின் ருசிகரமான மாம்சங் களைப் பக்குவம் செய்து, தேனுடன் கலந்து எடுத்து வந்து, முதல் நாளிற்போல் நிர்மால்யம் ஒதுக்கி, அபிஷேக அர்ச்சனை கள் செய்து, நிவேதனத்தை உண்பித்தார். இரவு கையில் வில்லும் அம்புமாகக் காவல் காத்தார். மறுநாள் பொழுது விடிந்ததும் கீழே இறங்கிச் சென்ருர்.

ஒவ்வொரு தினமும் ஸந்நிதி அசுத்தமானதாகக் கண்டு சிவகோசரியார் மனம் மிகவும் வருந்தினுர். தினம் ஈச்வரனை ''யாரோ ஒரு வேடன் தினம் அசுத்தம் செய்து போகிருனே - என் மனம் மிக்க வேதனைப்படுகிறதே - அசுத்தம் செய்து போவது தங்கள் திருவுளச் சம்மதமா? என் வேதனையைத் தீர்த்தருளக் கூடாதா'' என்று தினம் ஈச்வரனை வேண்டி பிரார்த்தனை செய்துவந்தார். ஐந்து தினங்கள் சென்றன. இடையில் ஒரு நாள் தாய் தந்தையர்களும் வந்து, திண்ண ஞரின் மனே நிலையையறிந்து, திரும்பிச் சென்றுவிட்டார்கள்.

ஐந்தாம் நாள் இரவு ஈச்வரன் சிவகோசரியார் கனவில் காக்ஷி கொடுத்து அருள் புரிந்தார்

"வந்து போகிறவன் ஸாதாரண வேடன் அல்ல. அவன் அசுத்தம் செய்யவில்லை. மிகுந்த பக்தியுடன் பூஜை செய்கிருன்.

''அவனுடைய வடிவெல்லாம் நம் பக்கல் அன்பென்றும்
அவனுடைய அறிவெல்லாம் நமையறியும் அறிவென்றும்
அவனுடைய செயலெல்லாம் நமக்கினிய வாமென்றும்
அவனுடைய நிலை இவ்வாறறி நீ என்றருள் செய்தார்.

நாளைய தினம் நீ பூஜையை முடித்தபின் ஒளிந்திருந்து பார்க்க வும்; அவன் அன்பின் திறத்தை அறிவாய்'' என்று அருள் செய்து மறைந்தார். சிவகோசரியார் மனம் தெளிந்தது. மறுநாள் — ஆரும் நாள் பூஜை முடிந்ததும் ஒரு மரத்தின் பின்னுல் ஒளிந்திருந்தார்.

பிற்பகல் வழக்கம்போல் திண்ணனுர் பூஜைக்கு வருகிருர் வழியே பல துர்ச்சகுனங்கள் கண்டு "என்னப்பனுக்கு என்ன தீங்கு நேர்ந்ததோ" என்று பதைத்து ஓடி வருகிருர். ஈச்வர னுடைய வலதுகண்ணில் ரத்தம் பெருகி வழிந்து கொண்டிருந் தது, மனம் பதறுகிறது, கையில் இருந்த வில் கீழே விழுகிறது மாம்சம் சிதறுகிறது, தலையவிழ்ந்தது மலர்களும் சிதறின. "அந்தோ என் அப்பனே" என்று அலறினர் — வாய் நீரும் கொட்டியது, துஷ்ட மிருகம் ஏதேனும் தீங்கிழைத்ததோ வென்று சுற்றி வந்தார். ஒன்றும் காணவில்லை. துஷ்ட மனி தன் செயலோவென்று துடித்தார், ஈச்வரன் அருளால் திண்ணனுர் கண்களில் ஒளிந்திருந்த சிவகோசரியார் தென்பட வில்லை.

ஆஹா! உடனே வைத்ய மல்லவோ செய்ய வேண்டு மென்ற பிரக்ஞை வந்தது. தகுந்த பச்சிலைச் சாறுகளைப் பிழிந்து பார்த்தார் சில வேர்களை அரைத்துக் களிம்பைத் தடவி ஞர் ரத்தம் நிற்கவில்லை. ஒரு சிறந்த எண்ணம் திடீரென்று உதித்தது "ஊனுக்கு ஊன் அல்லவா சிறந்த வைத்யம்!" ஈச்வரன் கண்நோய் தீர, எனது வலது கண்ணை அர்ப்பணம் செய்வேன்" என்று முடிவு செய்தார் பரம ஸந்தோஷத்துடன் தன் வலது கண்ணை அம்பினல் பெயர்த்து ஈச்வரன் வலது கண்ணில் அப்பினர். உடனே ரத்தம் வழிந்தது நின்று, கண் பிரகாசமடைந்தது. திண்ணனுர் பரமானந்தமடைந்தார் ஆனந்தக் கூத்தாடினர். ஒளிந்திருந்த சிவகோசரியார் — கண்ணப்பர் அன்பின் திறத்தைக் கண்டு அதிசயித்து அவரும் ஆனந்தக் கண்ணீர் பெருக்கினர்.

கண்ணப்பர் அன்பின் திறத்தைப் பின்னும் விளக்கம் செய்ய சிறிது நேரத்திற்கெல்லாம், ஈச்வரன் தன் இடது கண்ணில் ரத்தம் பெருகச் செய்தார். கண்ணப்பர் சிறிதும் கவலைப்படவில்லை, ஈச்வரன் கொடுத்த இரண்டாவது கண்ணையும் ஈச்வரனுக்கு அர்ப்பணம் செய்யும் பாக்யம் வாய்த்ததே யென்று இரண்டு பங்கு ஸந்தோஷம் கொண்டார், இரண்டாவது கண்ணைப் பெயர்த்து விட்டால், பெயர்த்த சூட்டுடன், ஈச்வரன் கண்ணில், நேராகப் பொருத்த இடம் தெரியவேண்டுமே யென்ற முன்யோஜனையுடன் தன் இடது காலை, அடையாளத்திற்காக, ஈச்வரனுடைய இடது கண்ணின் இடது ஓரத்தில் ஊன்றிக் கொண்டார். அம்பினல் இடது கண்ணைப் பெயர்க்க ஆரம்பித்தார்

"தரித்திலர் தேவ தேவர்"

உடனே லிங்கத்தினின்றும் ஆவிர்ப்பவித்து—" நில்லு கண்ணப்ப ! நில்லு கண்ணப்ப ! நில்லு கண்ணப்ப !" என்று மும்முறை மறைபேசும் திருவாயால் மலர்ந்தருளி, மலர்க்கையாலும் கண்ணைப் பெயர்க்கும் கண்ணப்பர் கையைத் தடுத்தருளினர், தேவர்கள் புஷ்பமாரி பெய்தார்கள். சிவ கோசரியார் பரவசமாக ஓடிவந்து கண்ணப்பர் பாதங்களில் விழுந்து நமஸ்கரித்தார்.

காளத்தியப்பர் திண்ணனுரைப் பார்த்து—" கண்ணப்பனே, என் வலத்தில் மாறிலாய் நிற்க " என்று அருள் புரிந்து கண்ணப்பரை நித்யமான ஆனந்த நிலையில் நிறுத்தினர்.

ஈச்வரன் அளித்த திருப் பெயரால் கண்ணப்ப நாயனர் என்று திகழ்கின்ருர்.

ஈச்வரன் நித்ய யுவா—அவருக்கு என்றும் 16 வயது. மார்க்கண்டேயர் அருள் பெற்றது 16 வயது முடிந்ததும். அதற்கு மேல் வயது ஏருமல் அதே 16 வயது, இந்தச் சரித்திரத்திலும் கண்ணப்பர் தம் 16 ம் வயதில் ஈச்வரன் அருள் பெற்று—அருள் பெற்ற க்ஷணம் முதல்—மாறு இலாதவராய் (மாறிலாய் ! நிற்க !) அதே 16 வயதாக சிரஞ்சீவியாக—நித்யமான ஆனந்தத்தை யனுபவித்துக் கொண்டு இருக்கிருர்.

சுபம்! அன்பே சிவம் !

அன்பே கண்ணப்பர் ! !

---

உ

சிவமயம்

# கண்ணப்ப நாயனுர் புராணம்

## சேக்கிழார் பெருமான் காவ்யத்தில் சில புதிய கருத்துக்கள்

(குறிப்பு : முதலில் போட்டிருக்கும் எண் சேக்கிழார் புராணத்தில் செய்யுள் எண்)

திருத் தொண்டத் தொகை

### " கலைமலிந்த சீர்நம்பி கண்ணப்பர்க் கடியேன் "

**(96)** குடுமித்தேவர் : திரு ஸி கே ஸுப்ரமண்ய முதலியார் அவர்கள் எடுத்துக்காட்டும் வேதோக்தமான விளக்கத்தைக் கவனிக்கவும் அதர்வசிகை உபநிஷத்—சிவ ஏகோத்யேய: சிவம் கர : ஸர்வமந்யத் பரித்யஜ்ய ஸமாப்தா அதர்வசிகா. (மற்ற எல்லா தேவதைகளையும் வழிபடுவதை விட்டுப் பரமேச்வரன் ஒருவரே பூஜிக்கப்படவேண்டிய தெய்வமென்று ஸித்தாந்தம் செய்து அதர்வசிகை முடிந்தது)

சிரஸ்ஸுக்குமேல் சிகை (குடுமி), வேதத்தின் சிகையால் பரதெய்வமென்று போற்றப்பட்ட தெய்வம் பரமேச்வரன்—சிகை தெய்வம்—குடுமித்தேவர்.

**(105)** ஏக நாயகர்—தனி—ஒப்பற்ற முழு முதற் கடவுள் " ஏக ஏவ ருத்ரோ ந த்வீதீயாய தஸ்தே " என்று வேதம் சொல்லுகிறது, ஈச்வரன் ஒருவர்—ஒப்பற்றவர், அவருக்கு ஸமமாக இரண்டாவது கிடையாது என்று அர்த்தம், அத்வைதம் என்ற ஸம்ஸ்க்ருத பதத்திற்கு இதுவே ஸரியான அர்த்தம்.

பிரம்மம் ஒன்றுதான் உளது, பிரம்மத்தைத் தவிர வேறு இரண்டாவது கிடையாது, ஒவ்வொரு ஜீவனும் பிரம்மமே ; நானும் பிரம்மம் என்று சொல்வது தவறு.

(123) பொன் செருப்பால் மாற்றி — திரு ஸி. கே. ஸு. முதலியார் அவர்கள் பொன் — அழகிய செருப்பால் மாற்றி —

"பொன்னுர் திருமுடி" என்புழிப்போல் பொன் என்று அருமை யாகக் கூறிய திறமும் காண்க, என்று விளக்கம் செய்திருக்கிருர்.

ஈச்வரன் பொன்னுர் மேனியன் "நமோ ஹிரண்ய பாஹவே ஹிரண்ய வர்ணுய, ஹிரண்ய ரூபாய ஹிரண்ய பதயே, அம்பிகாபதயே, உமாபதயே, பசுபதயே நமோ நம:" என்பது வேதம். ஈச்வரன் ஸ்வர்ணமயம். ஹிரண்யம் ஸ்வர்ணம்

ஸ்பர்சவேதி ஸ்பர்சத்தால் இரும்பைப் பொன்னுக்கும்.

வேதகத்திரும்பு பொன்னுனுர்போல் - செய்யுள் 154

வேதகம்—வேதி - தர்சனவேதி, ஸ்பர்சவேதியென இரு வகைப்படும். பொன்னுர் மேனியனுன பரமேச்வரன் திருமேனி யின் மேல் பட்ட தோல் செருப்பும் பொன் செருப்பு ஆயிற்ருே வென்று நாம் அதிசயிக்கும் வண்ணம் "பொன் செருப்பால் மாற்றி" என்று சேக்கிழார் பாடியிருக்கிருர்.

சேக்கிழார் பெருமான் இந்தச் செய்யுளில் கண்ணப்பர், மிகுந்த பக்தியுடன் அன்பே வடிவாகச் செய்த பூஜை முறையை வர்ணித்திருக்கிருர்.

(1) முதலில் நிர்மால்யத்தைப் பொன் செருப்பால் மாற்றுதல்.

(2) வாயில் கொணர்ந்த திருமஞ்சன நீரை அன்புமிழ் வார் போல, அபிஷேகம் செய்தல்.

(3) தலைமிசைச் சுமந்த பள்ளித்தாமத்தை வணங்கிச் சாத்தல் (அர்ச்சனை)

(4) கடைசியாக நிவேதனம்.

இந்த பூஜை வழிபாட்டை நாமும் மனத்தாற் செய்து இன்புறவேண்டும். ஸ்ரீ ஆதி சங்கரர் கண்ணப்பர் பூஜையை ஈச்வரன் எப்படி ஏற்றுக்கொண்டார் என்று மிக அழகாகவும் சிறப்பாகவும் பாடியிருக்கிருர். இருவர் வாசகங்களையும் சேர்த்து அனுபவிப்போம்.

சேக்கிழார்—முடிமிசை மலரைக் காலில் வளைத்த பொன் செருப்பால் மாற்றி—

ஆதி சங்கரர் : சிவானந்தலஹரி—63-வது ச்லோகம்

மார்க்காவர்த்தித பாதுகா பசுபதே ரங்கஸ்ய கூர்ச்சாயதே.

நிர்மால்யத்தை ஒதுக்கின செருப்பை, ஈச்வரன் எப்படி ஏற்றுக்கொண்டார் என்று சொல்லுகிறூர். காடுமலைகளில் நடந்து நடந்து தேய்ந்துபோன செருப்பு—ஈச்வரனுடைய திருமேனிக்குப் புனிதமான கூர்ச்சம் ஆயிற்று, கூர்ச்சம்—தர்ப்பை. சிவானந்தலஹரிக்கு உரைவெளியிட்டிருக்கும் ஒரு வித்வானுவது—இதில் அடங்கிய சிறந்த கருத்தை விளக்க வில்லை. குறிப்பிட்ட சிலருக்கு ஸரியான அர்த்தம் தெரிந்திருக்கலாம். தமிழர்களும் இந்த உயர்ந்த கருத்தை யனுபவிக்க வேண்டும்.

முதல் செயல்—நிர்மால்யத்தை ஒதுக்குதல்; கண்ணப்பர் (பொன்) செருப்பால் ஒதுக்குகிறூர். ஆகம விதிப்படி நிர்மால்யத்தைக் கைகளாலோ ஒரு வஸ்திரத்தாலோ, ஸாதாரண வாறு கோலாலோ ஒதுக்கக்கூடாது. பவிந்ரமான தர்ப்பைக்கட்டால் ஒதுக்கவேண்டும், கண்ணப்பர் செருப்பால் ஒதுக்கிய செயலை ஈச்வரன் ஆகமவிதிப்படி, தர்ப்பையால் ஒதுக்கினதாக ஏற்றுக்கொண்டார், (பாதுகா-கூர்ச்சாயதே) இதையும்விடச் சிறந்த அர்த்தம் வேறு இருக்கிறது. ஆகமவிதிப்படி அபிஷேக ஜலத்தை நேராக, சிவலிங்கத் திருமேனியின்மேல் விடக்கூடாது. பவித்ரமான தர்ப்பைகளை ஒரு சீராகக் கட்டி, சிவலிங்கத் திருமேனியின்மேல், தர்ப்பைக் கட்டின் நுனி பாகத்தை, மேலாக மேல் நோக்கிவைத்து அடிபாகத்தைப் பிரித்து லிங்கத்தின் நாலு பக்கங்களிலும் பரப்பினமாதிரி வைத்து, தர்ப்பைக் கட்டின் நுனியின்மேல், அபிஷேக ஜலத்தை விடவேண்டும். ஜலம் அடிதர்ப்பைகள் மூலம் சிவலிங்கத் திருமேனி முற்றிலும் சுற்றிலும், வழிந்து ஓடி, கோமுகத்தின் வழியாக வெளிப்போகும். இந்த முறையில் கண்ணப்பர் நிர்மால்யத்தை ஒதுக்கும்போது, அவர் செருப்பு பட்ட விடங்களில் எல்லாம் கூர்ச்சம் வைத்ததாக ஈச்வரன் ஏற்றுக் கொண்டார்.

இந்த விளக்கத்தில்—தர்ப்பைக்கட்டின் நுனி, அடி பாகங்களின் பொருத்தமும் விளங்குவதைக் காண்க.

பாதத்தில்-விரல்கள். நுனி; குதிகால் அடி பாகம். ஆகவே விரல்பக்கம் இருக்கும் செருப்பின் பாகம் நுனி; குதிகால் பக்கம் இருக்கும் செருப்பின் பாகம் அடி. கண்ணப்பர் நிர்மால்யத்தைச் செருப்பால் ஒதுக்குகையில்—செருப்பின் நுனிபாகம் மேலாகவும், அடிபாகம் கீழாகவும் அமைவதையும் கவனித்து, அன்பர்கள் ஆனந்திப்பார்களாக!

ஆகக் கண்ணப்பர் செருப்பு ஆகமத்தில் சொல்லப்பட்ட பிரகாரம் இரண்டு விதங்களில், புனிதமான கூர்ச்சமாயிற்று, ஈச்வரன் புனிதமான தர்ப்பையாக ஏற்றுக்கொண்டார்.

## அபிஷேகம்

சேக்கிழார் : வாயின் மஞ்சன நீர்தன்னை, விளைத்த அன்புமிழ்வார்போல் விமலனர் முடிமேல் விட்டார்.

கண்ணப்பர் அன்பின் திறத்தை அறியாமல் சில ஸ்மார்த்த ப்ராம்மணர்கள். வாய்நீரை சிவலிங்கத்தின் மேல் அலக்ஷ்யமாகக் கொப்பளித்தாரென்று மிக அலக்ஷ்யமாகச் சொல்லிவிடுகிருர்கள். அப்பர் ஸ்வாமிகள் "தூயவாய்க்கலசம் ஆட்டி" என்ருர். கண்ணப்பரின் தூயவாய் ஒருகலசம் : கலசத்தில் நீர் கொண்டு அபிஷேகம் செய்வதுபோல் பக்தியோடு நிதானமாக நீரை அபிஷேகம் செய்தார், பரமேச்வரனுடைய ஈசானம் முதலிய ஐந்து முகங்களிலும் பரவுமாறு தாரையாக வார்த்தார். ஸ்வர்ணமுகி ஆற்றுநீர், கண்ணப்பர் வாயில் தங்கி, உமிழ் நீருடன் ஸம்பந்தப்பட்டதால் தாரையாக மெல்லிய கம்பிபோல் வெளிவந்தது.

இந்த அபிஷேகத்தை ஈச்வரன் எப்படி ஏற்றுக் கொண்டார் என்று ஆதிசங்கரர் வர்ணிக்கிருர்.

கண்டுஷாம்பு நிஷேசனம் புரரிபோ: திவ்யாபி ஷேகாயதே.

தமிழில் பாடிய கவிகள் "கங்கை நீர்" என்று பாடியிருக்கிருர்கள். ஆதிசங்கரர் ச்லோகத்திற்கு அர்த்தம் எழுதியவர்களும் திவ்யாபிஷேகாயதே என்ருல் புனிதமான கங்கை நீரால் செய்த அபிஷேகமாக ஆயிற்று என்றே விளக்கம் செய்கிருர்கள். அன்பே உருவான கண்ணப்பர். அன்பையே உமிழ்ந்தார் என்று சேக்கிழார் பாடியிருக்க, தமிழ் வித்வான்கள் கங்கையின் புனலென்றும் பற்களை ரத்னங்களென்றும் நாவே மலரென்றும் மீசையே தர்ப்பையென்றும் சொல்லும் வாசகங்கள் பொருத்தமான வர்ணனைகள் ஆகுமே தவிர, "அன்புமிழ்வார்போல" என்ற சேக்கிழார் வாக்குக்கு இணையாகா.

ஆதி சங்கரர் கருத்தை விளக்குவாம். திவ்யாபிஷேகம் என்ற பதம் புனிதத்தன்மையை மாத்திரம் குறிக்கவில்லை. ஸ்வர்ணகலசங்களில் புனிதமான தீர்த்தம் வைத்து [கங்கை, நர்மதை ஸிந்து, காவேரி, கோதாவரி, கிருஷ்ண எல்லா நதி

தீர்த்தங்களும் புனிதமே ; கோயில் கிணறு, திருக்குள நீர்களும் புனிதமே ] கலசத்தில் ஸவர்ணம், ரத்னங்கள் போட்டுக் கலசத்தின் வாயில் மாவிலே, தேங்காய். தர்ப்பை வைப்பது எல்லாம் முறைதான். ஏகாதசருத்ர பாராயணம் பண்ணி மந்த்ரவத் திவ்ய நீராக்கி அபிஷேகம் செய்கிருர்கள். அந்த விதம் திவ்யாபிஷேகமாக ஈச்வரன் ஏற்றுக் கொண்டார்.

## அடுத்தபடி—அர்ச்சனை

சேக்கிழார் :— தலைமிசைச் சுமந்த பள்ளித் தாமத்தைத் தம்பிரானுர் முடிமிசை வணங்கிச் சாத்தி

இந்த இடத்திலும் பல ஸ்மார்த்த ப்ராம்மணர்கள் அலக்ஷ்யமாகப் பேசுகிருர்கள். தலையில் எடுத்துச் சென்ற பச்சிலை மலர்களை, உபந்யாஸகர் தம் தலையை இரண்டு மூன்று தடவை அபிநயமாக ஆட்டிக் காண்பித்து லிங்கத்தின் மேல் விழும்படி செய்தார் என்று பேசுகிருர். இதுவும் கண்ணப்பர் அன்பின் திறத்தை அறியாமல் பேசுவதாகும்.

நின்றபடி தலையை ஆட்டி, தலையில் இருக்கும் இலை புஷ்பங்கள் உதிரும்படி செய்வது பக்தியுடன் செய்யும் அர்ச்சனை ஆகுமா ? சேக்கிழார் "வணங்கிச் சாத்தி" என்று பாடியிருக்கிருர். நான் கேட்ட தமிழ் வித்வான்கள் கூட இந்த இரண்டு பதங்களின் சிறப்பு விளங்க, விளக்கம் செய்யவில்லை.

தலையைத் தாழ்த்தி வணங்கிய வண்ணம் — (தலையே நீ வணங்காய்) மெதுவாக ஆட்டி, பச்சிலைகளும் புஷ்பங்களும் ஈச்வரனுடைய ஐந்து முகங்களிலும் நிதானமாக விழும்படி செய்தார். மேலும் "சாத்தி" என்று பதம் போட்டதால், புஷ்பங்கள், ஒன்றின் மேல் ஒன்ருக, அடுக்காகத் தொடுத்த மாலை சாத்தியது போல் விழும் வண்ணம் செய்தார். இப்படி வணங்கிச் சாத்தின அர்ச்சனையை, நின்ற வண்ணம் தலையை ஆட்டி இலைகளை உதிர்த்தார் என்று சொல்வது அபசாரம். சேக்கிழார் பாடியிருக்கும் "வணங்கிச் சாத்தி" என்ற இரண்டு பதங்களுக்கு சைவ உலகம் அடிமையாக வேண்டும். ஆதிசங்கரர் இந்த அர்ச்சனையை எப்படி ஏற்றுக் கொண்டார் என்று வயக்தமாகச் சொல்லவில்லை. ச்லோகத்தில் 2-வது வரிக்கும் 3-வது வரிக்கும் நடுவில் அர்ச்சனை தொக்கி நிற்கிறது. ஈச்வரனுடைய அர்ச்சனைக்கு ஒவ்வொரு காலத்திலும் சில சில புஷ்பங்கள் விதிக்கப்பட்டிருக்கின்றன. ஆகவே கண்ணப்பர் அர்ச்சனை

செய்த இலேகளேயும் மலர்களேயும் அந்தக்காலத்திற்கு விதித்த மலர்களாக ஏற்றுக்கொண்டார் என்று நாம் அமைத்துக் கொள்வோம்.

## கடைசியாக-நிவேதனம்

சேக்கிழார். நாயனீரே, அமுது செய்தருளும்.

கண்ணப்பர் பக்தியுடன் உபசரிப்பதை ஏற்று ஈச்வரன் அமுது செய்தாரென்றே அர்த்தம். அமுது செய்யாவிடில் அவர் அடியின் கீழ் கண்ணப்பர் தம் தலேயை உடைத்துக் கொண்டு பிராணனே விட்டிருப்பார். நம்பியாண்டார் நம்பி எடுத்துச் சென்ற நிவேதனத்தை பொல்லாப் பிள்ளேயார் ஏற்று உட்கொண்டதுபோல், காளத்தியப்பரும் கண்ணப்பர் ஊட்டிய நிவேதனத்தை சாப்பிட்டு அருள் செய்தார்.

ஆதிசங்கரர்: கிஞ்சித் பக்ஷித மாம்ஸ சேஷ கபளம் நவ்யோபஹாரயதே

"கண்ணப்பர் தம் நாவினில் பழகிய இனிமை பார்த்து எடுத்து வந்த மாம்ஸ சேஷம், எச்சில், உச்சிஷ்டதோஷம் நீங்கி, புதிதாக செய்யப்பட்ட நிவேதனம் ஆயிற்று. அதாவது மாம்ஸம் ஈச்வரனுக்கு அர்ப்பணம் ஆகிவிட்டது.

(126) அமுது செய்வித்த வேடர்.

செய்வித்த என்ற பதம் ஈச்வரன் சாப்பிட்டார் என்ற கருத்தை ஊர்ஜிதப்படுத்துகிறது. அமுது செய்வித்தார்— சாப்பிடும்படி செய்தார். குழைந்த வயிற்றையும் (இளேத்தனர் நாயனுரென்று-செய்யுள் 123) பின்னர் குருதி பெருகும் கண்களேயும் காண்பித்த காளத்தியப்பர் வாயையும் திறந்து காண்பித்து சாப்பிட்டார் என்றே அர்த்தம். வெறும் நிவேதனமாகக் கண்ணப்பர் கையைக் காட்டித் திருப்தியடையவில்லே, ஈச்வரனுக்கு நிவேதனமான பிரஸாதமாகக் கண்ணப்பர் சாப்பிடவுமில்லே. ஆறுநாட்களும் ஊண் உறக்கமில்லாமல் இருந்தார்.

(126) இனிய நல்லூன் இன்னமும் வேண்டும்.

ஒரு தாய் ஒரு கிண்ணத்தில் அன்னம் பிசைந்து கொண்டு வந்து, இன்மொழிகள் சொல்லி, காக்கை குருவி, கோழி, நாய் முதலியவைகளேக் காட்டி குழந்தைக்கு ஊட்டுவாள். குழந்தை வேண்டாமென்று துப்பும் வரையில் ஊட்டினுல்தான் தாய்க்குத்

திருப்தியேற்படும். எப்பொழுதாவது ஒரு சமயம் முழுதும் சாப்பிட்டு விட்டால், தாய் உள்ளம் "குழந்தைக்கு இன்றைக்கு பசி கொஞ்சம் ஜாஸ்தி போலும். இன்னும் கொஞ்சம் கொண்டு வந்திருந்தாலும் சாப்பிட்டிருக்கும்; தெரியாமல் போயிற்றே" என்று நினைக்கும். அடுத்த வேளை கொஞ்சம் அதிகமாகவே அன்னம் தயாரிப்பாள்.

கண்ணப்பர் குடுமித்தேவரிடம் செலுத்திய அன்பு, ஒரு தாய் தன் குழந்தையின் மேல் செலுத்தும் அன்பு. ஆகவே அமுது செய்வித்த வேடர், ஈச்வரன் முழுதும் சாப்பிட்டது கண்டு. திருக்காளத்தியப்பருக்கு "இனிய நல்லூன் இன்னமும் வேண்டும்" என்று தீர்மானிக்கிறார்; மறுநாள் கொஞ்சம் அதிகமாகவும், பன்றி இறைச்சியுடன் மான், கலை, மரை, கடமை இறைச்சிகளும், தேன் சேர்த்து அதிக ருசிகரமாகக் கொண்டு வருகிறார்.

கண்ணப்பர் ஈச்வரனிடம் தாயன்பு செலுத்தினார். குழந்தையாக ஈச்வரன் கண்ணப்பரான தாயின் அன்பிற்குக் கட்டுப்பட்டு தன் வாயைத் திறந்து ஏற்றுக்கொண்டார்.

மாணிக்கவாசக ஸ்வாமிகள் :—"பால் நினைந்து ஊட்டும்
தாயினும் சாலப் பரிந்து —

என்று ஈச்வரனை தாயைக் காட்டிலும் அன்புடையவர் என்று போற்றுகிறார்; அந்த ஈச்வரனிடம் தாயன்பு செலுத்தின கண்ணப்பரின் அன்பின் திறத்தைப் "கண்ணப்பர் ஒப்பதோர் அன்பின்மை கண்டபின், என்னப்பன் ......" என்று பாராட்டியிருக்கிறார்.

(136) வெந்த இறைச்சியும் எலும்பும் கண்டு

திரு. ஸி. கே. ஸு. முதலியார் "இவை திண்ணனார் குடுமித்தேவரை ஊட்டின பாவனையால் அவர் உண்டருளியனவாகக் கொண்டவை" என்று குறிப்பு எழுதியிருக்கிறார்.

கண்ணப்பர் அமுது செய்வித்தார்; அண்ணலார் அமுதை உண்டு அருளினார். கொண்டுவந்த இறைச்சி தீர்ந்துவிட்டதால், இனிய நல்லூன் இன்னமும் வேண்டும் என மனதில் தீர்மானிக்கிறார். எல்லாம் பாவனை யென்றும், உண்மையில் இறைச்சி கீழே சிதறிக்கிடந்ததென்று சொல்வது உசிதமாகப் படவில்லை. ஈச்வரன் கண்ணில் ரத்தம் வந்ததாகக் கண்டதும், தன் கண்ணைப் பெயர்த்து அப்பினதும், ஈச்வரன் கண்ணில் பொருந்தி ரத்தம் நின்றதும் எவ்வளவு உண்மை

யாகக் கண்ணப்பர் அனுபவித்தாரோ—நாமும் அனுபவிக்கி ரோமோ அந்த விதம் ஈச்வரனுக்கு வயிறு வாடினதாகக் கண்டதும் ஆகாரம் கொணர்ந்து ஊட்டினதும், கொண்டு வந்த ஆகாரம் முழுதும் தீர்ந்ததாகக் கண்டதும் உண்மை யாகவே அனுபவித்தார்

[இறைச்சி கிடந்தாலும் எலும்பு கிடக்க நியாயமே இல்லை].

அன்பர்களே, கவனியுங்கள். பன்றியை அறுத்து, நரம்பு எலும்புகளைக் கழித்து, நல்ல பாகங்களைக் கோலினிற் கோத்து, நெருப்பிற் காய்ச்சிப் பதமாக்கி, கெட்டுப்போன பாகங்களைக் கழித்தெறிந்து, நன்ருக வெந்து பதமான பாகங்களை நாவினிற் பழகிய இனிமை பார்த்ததெல்லாம் கீழே - ஆற்றின் எதிர்க் கரையில். மிகவும் ருசிகரமான, நன்கு பக்குவம் செய்யப்பட்ட இறைச்சியைத்தான் கண்ணப்பர் எடுத்துக்கொண்டு மலைமீ தேறி ஸந்நிதிக்கு வருகிருர். ஆகவே, ஸந்நிதியில் எலும்போ, நரம்போ, தோலோ சிதறிக் கிடக்க நியாயமே இல்லை

ஆனல், தெய்வப் புலவர் சேக்கிழார் பொய்யாகப் பாடு வாரா? சிவகோசரியார் கண்டாரென்று பாடியிருக்கிருரே. இதற்கு விளக்கம் மிகவும் ஸுலபம். சிவகோசரியார் கண்டா ரென்றுதான் பாடியிருக்கிருர்.

ஈச்வரன் திருவிளையாடலால், சிவகோசரியார் கண் களுக்கு இறைச்சியும், நரம்பும், எலும்பும், தோலும் சிதறிக் கிடந்ததாக ஒரு தோற்றம். தினம் இந்தத் தோற்றம் கண்டு தான், அசுத்தம் செய்வது ஒரு வேடனுக இருக்கவேண்டு மென்று ஊகிக்கிருர். ஸந்நிதி சுத்தமாக இருந்தால், கண்ணப் பர் வந்து போவதே சிவகோசரியாருக்குத் தெரிந்திருக்காது. தவமுனிவர், ஆகம முறைப்படி தவருது பூஜை செய்பவர். கண்ணப்பர் அன்பின் திறத்தை அவரும் அறிந்து அனுபவிக்க வேண்டுமென்று திருவுளம் கொண்டுதான் ஈச்வரன் அவர் கண்களில் அனுசிதம் தெரியும்படி ஒரு தோற்றம் ஏற்படுத்தி ஞர். அனுசிதம் கண்டு சிவகோசரியார் மனம் தவித்ததை நாமும் அறிந்து அவரைப் பாராட்டுகிறோம்.

138 செருப்படியும் நாயடியும் திருவலகால் மாற்றியபின்—

செருப்படியும் நாயடியும் கூட மேலே சொன்ன பிரகாரம் ஈச்வர லீலையால் ஏற்பட்ட தோற்றமே. செருப்படியையும், நாயடியையும் உண்மையில் பார்த்திருக்க முடியாது. சிவலிங்கம் மலையின் உச்சியில் இருக்கிறது அதன் பக்கத்தில் மண்ணோ, மணலோ இருக்க நியாயம் இல்லை. சிவகோசரியார் சுத்தமாகவே

வைத்திருப்பார். கருங்கல்லின்மேல் செருப்படியோ, நாயடியோ பிறர் அடையாளம் காணும்படி பதியாது.

நக்கீரர் திருக் கண்ணப்ப தேவர் திருமறத்தில் "ஈங்கொரு வேடுவன் நாயுடன் புகுந்து" என்று பாடியிருப்பதாலும், சேக்கிழாரும் 'நாயடி' என்று சொல்வதாலும், திரு. ஸி. கே. ஸு. முதலியார் அவர்கள் "ஒரு நாய் திண்ணனுரைப் பிரியாது பின் தொடர்ந்து வந்ததென்று சேக்கிழார் பெருமான் உய்த் துணர வைக்கிருர்" என்பதாகத் தம் உரையில் எழுதுகிருர். இந்த அபிப்ராயத்தைப் பற்றி அனுபந்தத்தில் எழுதியிருப்ப தைப் பார்க்கவும்.

இறைச்சி, எலும்பு, நரம்பு, தோல் சிதறிக் கிடப்பதை உண்மையாகக் கொண்டு, உரையாளர் ஸ்ரீ மகாலிங்கைய்யர் "திண்ணனுர் வேட்டைக் கெழுந்து போனபின், சிதறிக்கிடந்த இறைச்சியைத் தின்னவந்த, மலை, காட்டிலுள்ள நாய்களின் அடிகளாக இருக்கலாமென்று விளக்கம் சொல்வதாக, திரு. ஸி. கே. ஸு. ஒரு குறிப்பு எழுதியிருக்கிருர்.

அப்படி நாய்களும், மற்று காக்கை, கழுகுகளும் வந்து இறைச்சியையும், தோல், எலும்புகளையும் தின்று போனுல், சிவகோசரியார் கண்ணில் அவை சிதறிக் கிடந்ததாகப் பட்டி ருக்காது. இறைச்சி, எலும்பு, செருப்படி, நாயடி எல்லாம் தோற்றமே. தோற்றம் கண்டு உண்மையென மனம் பதைக் கிருர். எல்லாவற்றையும் மாற்றியதாகச் செயல் செய்த பின் மனது கொஞ்சம் சாந்தியடைகிறது.

பிரதி தினம் கண்டபடியால், வருத்தம் அதிகமாகிறது; ஒரு வேடன்தான் தினம் அசுத்தம் செய்திருக்க வேண்டு மென்று ஊகிக்கிருர். திருமேனியின் மேலும் சுற்றிலும், தான் பூஜை செய்த பில்வதளங்களோ, மலர்களோ இல்லாமல் வேறு இலைகளும், மலர்களும் இருப்பதையும் பார்த்திருப்பார், தினம் வந்து போகும் வேடனே சுத்தமில்லாத பூஜை செய்தானே வென்றும் நினைத்திருக்கலாம். கண்ணப்பர் கால் செருப்பால் நிர்மால்யத்தை ஒதுக்கினதையோ, வாய் நீரை உமிழ்ந்த தையோ, தலையில் கொணர்ந்த இலைகளை உதிர்த்ததையோ, மாம்சத்தை ஊட்டினதையோ சிவகோசரியார் பார்த்ததாக சேக்கிழார் பெருமான் பாடவில்லை. (இது விஷயமாகவும் அனுபந்தம் பார்க்கவும்).

(140) தனிமுதலாம் பரனென்று பன்முறையால் துணிந்த மறை மொழியாலே துதி செய்து,

"தமீச்வராணும் பரமம் மகேச்வரம்" வேதங்களும் உப நிஷத்துக்களும் பரமேச்வரனுடைய பரத்வத்தைப் பலவிடங் களில், பல வாக்யங்களால் உத்கோஷித்தும் அத்வைதிகள் ஈச்வரனை ஸகுணப்ரம்ம மென்று குறைவாகச் சொல்லி, தாங்களே நிர்க்குணப்ரம்மம் என்று சொல்லிக் கொள்ளுகிறார் களே, இது பிரம்ம ஞானமா, அஞ்ஞானமா?

(151) அல்லலுறங்கார் பகல் வேட்டையாடுவார்

ஆறு நாட்களும் ஊண் உறக்கமில்லாமல் மனது ஈச்வரன் திருவடிகளிலேயே லயித்து நிலைத்து நின்றது. இந்த நிலை யைத் தான் ஆதிசங்கரர் சிவானந்த லஹரியில் பக்தி லக்ஷண மென்று அருளிச் செய்திருக்கிறார்.

பசுபதே: பாதாரவிந்த த்வயம் சேதோ விருத்தி ருபேத்ய திஷ்டதி ஸதா ஸா பக்திரித்யுச்யதே. (61-வது ச்லோகம்)

மனமானது பரமேச்வரனுடைய திருவடித் தாமரைகளை நாடி அடைந்து நிலைத்து நிற்பதுதான் பக்தியென்று சொல்லப் படும். இந்த விதம், குடிமித்தேவரைக் கண்ட க்ஷணம் முதல் மனம் லயித்து நிலைத்து நின்ற கன்ணப்பரின பக்தியின் திறத்தை "மார்க்கா வர்த்தித" என்ற 63-வது ச்லோகத்தில் பாராட்டுகிறார்.

(156) "வேதியர்தாம்".

"தேவேஷு த்வம் ப்ராஹ்மணோஸி"—ஸாம வேதம்.

ஈசான: ஸர்வ வித்யானும் ஈச்வரஸ் ஸர்வ பூதனும் பிரம்மாதிபதி: பிரம்மணோதிபதி: பிரம்மா சிவோமே அஸ்து ஸதாசிவோ ..... ம்.

வேதியா - வேத கீதா. (அப்பர் - திருநேரிசை.)

(175) வேடர் குலப் பெருந்தவத்தால் வந்த கொள்கை யி னும்பர் மேலார்.

திரு. ஸி. கே. ஸு. முதலியார் அவர்கள் எழுதிய விரி வுரையை நன்கு படித்துத்தெளிக, தேவர்கள் எல்லாரும் பதவி வேண்டி, காம்யார்த்தமாகவே பரமேச்வரனைப் பூஜை செய்திருக்கிறார்கள்.

மகாபாரதம்—துரோணபர்வம்.

பிரம்மண: ஸ்ருஷ்டி கர்த்ருத்வம் விஷ்ணோ: தானவ மர்த்தனம் | ஸ்வர்காதிபத்யம் இந்த்ரஸ்ய சிவபூஜாவிதே: பலம் ||

பிரம்மா ஸ்ருஷ்டி ஸாமர்த்யத்தையும் விஷ்ணு அஸுரர்களை வெல்லும் சக்தியையும் (சக்ராயுதத்தையும்) இந்திரன் ஸ்வர்க்காதிபத்யத்தையும் சிவ பூஜை செய்து சிவகிருபையால் பெற்ருர்கள்.

அடுத்தபடி அவரவர்கள் பல ஸமயங்களில் செய்த பாப நிவர்த்திக்காகவும் பல ஸமயங்களில் அபசாரங்கள் செய்து பெற்ற சாபநிவர்த்திக்காகவும் சிவலிங்கபூஜை செய்திருக்கிருர்கள். அனேக சிவாலயங்களில், விஷ்ணுபூஜித்த லிங்கம், பிரம்மா, இந்திரன். வருணன். அக்னி வாயு, சூர்யன், சந்திரன் முதலியோர் பூஜித்த லிங்கங்கள் பிரதிஷ்டையாகி யிருப்பதைப் பார்க்கலாம்.

பரமேச்வரன் யாரையும் பூஜித்தாரென்று கிடையாது.

சேர்ந்தறியாக் கையானை (மாணிக்கவாசகர்)

ருக்வேதம்—தவ ச்ரியே மருதோ மர்ஜயந்த ருத்ர யத்தே ஜனிம சாரு சித்ரம் பதம் யத்விஷ்ணோருபந்நிதாயி தேந பாஸி குஹ்யந்நாம கோனும்.

தேவர்கள் எல்லாரும் பரமேச்வரனை அழகிய சிவ லிங்கத் திருமேனியில் பூஜை செய்து, ஐச்வர்யங்களை அடைந்தார்கள் மகாவிஷ்ணுவும் பூஜித்து விஷ்ணு பதவியை அடைந்தார்.— (இது ருக் வேதம்).

விஷ்ணு செய்த பூஜை காம்யார்த்தம். சக்ராயுதம் பெற வேண்டி தினம் 1000 தாமரை மலர்களால் பூஜை செய்தார். ஒரு நாள் ஒரு பூக்குறைய தன் கண்மலரை இடந்து அர்ச்சித்து பூஜையைப் பூர்த்தி செய்தார். ஈச்வரன் அவருக்குக் காக்ஷி கொடுத்து சக்ராயுதம் அருளினர். சக்ரதான ஸ்வரூபமூர்த்தி சிவபராக்ரமம் 54வது மூர்த்தம். கண்ணப்பர் செய்தது நிஷ்காம்ய பூஜை. ஈச்வரனுடைய வலது கண்ணில் ரத்தம் வந்தது கண்டு, தன் வலது கண்ணைப் பெயர்த்து அப்பினர் அடுத்தாற்போல், ஈச்வரனுடைய இடது கண்ணில் ரத்தம் வருவது கண்டு, தன் இடது கண்ணையும் பெயர்க்கப் போகையில், காளத்தியப்பர் தடுத்தருளிக், காக்ஷி கொடுத்துத் தனது வலது புறத்தில் நித்யமாக இருக்கும்படி ஆனந்த நிலையை அனுக்ரஹித்தார். ஆதலால் கண்ணப்பர் உம்பர் மேலார்.

(177) "இடது கால் ஊன்றி" ஏன் இடது கால் ஊன்றினர்? ஒவ்வொரு பக்தர் மனதில் ஒவ்வொரு விதம் காரணம் தோன்றலாம். நான் சொல்வதும் ஒரு யுக்தி அபிப்ராயம் தான். கண்ணப்பர் அன்பு வடிவு-ஆகவே சிவஸ்ரூபம். கண்

ணப்பர் வலது கால்—ஈச்வரனுடைய வலது கால்போல். வாம பாகம் அம்பாள் பாகம் ஆனபடியால், இடது கண் அம்பாள் கண். (பின்னுரையில் சொல்லியிருக்கும் கருத்தையும் பார்க்க). அம்பாள் பாகத்துக் கண்ணில் அம்பாள் பாகத்துக்குள்ள இடது காலே படட்டும் என்பதாக ஈச்வரன் ஸங்கல்ப்பம்.

(180) பேறினி யிதன்மே லுண்டோ பிரான்திருக் கண்ணில் வந்த
ஊறுகண் டஞ்சித் தங்க ணிடந்தப்ப வுதவும் கையை
ஏறுயர்த் தவர்தம் கையால் பிடித்துக் கொண் டென்வ லத்தின்
மா றிலாய் ! நிற்க வென்று மன்னுபே ரருள்பு ரிந்தார்.

ஈச்வரன் எந்தக் கையால் தடுத்தருளினுர் என்று சேக்கிழார் பெருமான் குறிப்பிடவில்லை.

ஈச்வரனுடைய வலது கை - அபய ஹஸ்தம். இடது கை— 'வரதம்' - (அனுக்ரஹம்) இது ஸாதாரணமாக எல்லாருக்கும் தெரிந்த விஷயமே. வரம் கொடுத்து அனுக்ரஹிக்கப் போகும் ஈச்வரன் – வரதம் – ஆகிய இடது கையால் தடுத்தருளினுர் என்றே நாம் அமைத்துக் கொள்ளவேண்டும்.

கோவைத் தமிழ்ச் சங்க வெளியீடு 13 பக்கங்கள் 246 - 7) காளத்தியில் உள்ள வடமொழிக் கல்வெட்டு ஒன்றில் கண்ணப்பர் சரித்திரம் விவரமாகக் கூறப்பட்டிருக்கிறது. அவ்வடமொழி ச்லோகங்களின் சுருக்கம்.

(9) ஒரு கண்ணைப் பறித்து உதவி, மற்ருென்றையும் அதிவேகமாய்த் தோண்ட நினைத்த அளவில் பெண்ணொருபாகளது வளையணிந்த இடக்கை அதற்குத் தடையாய் நின்றது.

இடதுகை என்பதாகத் தெளிவாகவே சொல்லியிருக்கிறது. மேலே இடதுகால் ஊன்றினதற்கு ஒரு பொருத்தமான காரணம் சொன்னது போல், இங்கும் சொல்லலாம்; கருணை வடிவான அன்னை தன் பாகத்திலிருக்கும் கண்ணை குணப்படுத்த வேண்டி கண்ணப்பர் இரண்டாவது கண்ணையும் பெயர்த்துவிட வேண்டாமென்று தடுக்கும் பொறுப்பைத் தான் எடுத்துக் கொண்டு தன் (பாகத்துக்) கையால் தடுத்தாள் என்று சொல்வதும் பொருத்தமே.

(180) என் வலத்தில் மாறிலாய் ! நிற்க வென்று பேரருள் புரிந்தார்.

திரு. ஸி. கே. ஸு. முதலியார் அவர்கள் எழுதிய விரிவுரையில் :—

"சக்கரம் வேண்டித் தமது ஒரு கண்ணைத் தோண்டி அர்ச்சித்த திருமாலுக்கு எளிய இடபாகமும் தனக்கென ஒன்றும் வேண்டாது கண்ணை யப்பின கண்ணப்பருக்கு வலது பாகமும் அருளினர்" என்று எழுதுகிறார். இந்த வாசகத்தில் "எளிய இடபாகம்" என்ற பதங்கள் நன்றாகவில்லை. இந்த வரிகளுக்கு நாலு வரிகள் முன் - அம்மையாருக்கு இடமே இடமாகக் கொடுத்தார் என்று நயம்படச் சொன்ன திரு முதலியார் இந்த இடத்தில் "எளிய" இடமென்று சொல்வானேன்? அம்மையிருக்கும் பாகம் 'எளிய' இடபாகமா? மேலும்

திருமால் சக்ராயுதம் வேண்டி பூஜை செய்தார் ஒரு கண்ணைப் பிடுங்கி அர்ச்சித்தார். சக்ராயுதம் பெற்றார். இந்த வரலாற்றையும் இடதுபாகம் பெற்றதையும் இணைக்கவேண்டாம் மற்றொரு ஸமயம் தவம் செய்து இடது பாகம் பெறுகிறார் கேசவார்த்த மூர்த்தி சிவபராக்ரமம் 28வது மூர்த்தம்.

மாறிலாய்!

சரித்திரச் சுருக்கத்தின் முடிவில் எழுதி யிருக்கும் கருத்தைப் படிக்கவும். (பக்கம்-10)

## பின்னுரை

(ஒரு அழகிய கற்பனை)

ஈச்வரனுக்கு மூன்று கண்கள் கிடையாது; அவருக்கு சொந்தமான கண் அரைக்கண் தான்; நெற்றிக்கண்ணில் வலது பாதி.

இடது பாதியும் இடது கண்ணும் வாமபாகத்திலிருக்கும் அம்பிகையின் கண்கள். வலதுகண் கண்ணப்பர் கண். என்பதாக ஒரு புலவர் ஒரு வெண்பா பாடியிருக்கிறார்.

சொக்கநாதப் புலவர்

முக்கண்ண னென்றரனை முன்னோர் மொழிந்திடுவர்
அக்கண்ண ருக்குள்ள தரைக்கண்ணே — மிக்க
உமையின்கண் ஒன்றரைமற் றூன்வேடன் கண்ணென்
றமையுமென் றதனை லறி.

சுபம்! அன்பே சிவம்! அன்பே கண்ணப்பர்!

— O —

# அனுபந்தம் 1.

நக்கீரதேவ நாயனுர் பாடிய

## திருக்கண்ணப்பதேவர் திரு மறம்

திருக்கண்ணப்பர் வரலாற்றை நக்கீரர்
தன் மனுேபாவத்தில் அனுபவித்த விதம் பாடுகிருர்.

(1) நாய் பின் தொடர—வரி 46-வேடர் ஆனபடியால் ஒரு நாயும் அவருடன் இருந்திருக்கலாம் என்ற அனுமானத்தில் பாடியிருக்கலாம்.

நாய் இருக்க வேண்டிய அவசியமில்லே, இருந்ததாக சேக்கிழார் சொல்லவில்லே கடைசியில் நாயின் கதி என்ன ஆயிற்றென்று நக்கீரரும் சொல்லவில்லே,

(2) சிவகோசரியார் மறைந்திருந்து கண்ணப்பர் வருவதையும் அவர் பூஜை செய்ததையும் பார்த்ததாக நக்கீரர் பாடுகிருர்

'' கரந்திருந் தவணக் கானவன் வரவினேப்
பரந்த காட்டிடைப் பார்த்து நடுக்குற்று
வந்தவன் செய்து போயின வண்ணம்
சிந்தையிற் பொருது—''

சேக்கிழார் இவ்விதம் பாடவில்லே

(3) சிவகோசரியார் ஈச்வரனிடம் முறையிடும் போது தான் பார்த்த விதம் எல்லா விவரங்களுடன் [நாய் உள்பட] முறையிடுவதாக நக்கீரர் பாடுகிருர்

யீங்கொரு வேடுவ
ஞெயொடும் புகுந்து மிதித்துழக்கித்
தொடு செருப் படியா னீக்கி வாயி
லிடு புனன் மேனியி லாட்டித்
தன்றலே தங்கிய சருகிலே யுதிர்த்தோ ரிறைச்சியை
நின் திருக் கோயிலி லிட்டுப் போமது

வென்று முன்றனக் கினிதே ? யெனயுருக்
காணிற் கொன்றிடும் ; யாவ ராலும்
விலக்குறுங் குணத்த னல்ல னென்றுந்
திருக்குறும்.

(4) ஈச்வரன் சிவகோசரியாருக்குக் கனவில் அருள் செய்யும் போது, சிவகோசரியார் சொல்லி முறையிட்ட ஒவ்வொரு அநுசித செயலுக்கும் விளக்கம் சொல்வாராகி ஒவ்வொரு செயலும் தான் எப்படி ஏற்றுக் கொண்டாரென்று விளக்கம் சொன்னதாக நக்கீரர் பாடுகிறார்.

(நாய் விஷயம் தவிர)

புரி வொடு பூசனை செய்யுங்
குனிசிலை வேடன் குணமவை யாவன
வுரிமையிற் சிறந்த மாதவ னென்றுணர்.
அவனுகந் தியங்கியவிட முனிவன மதுவே, யவன்
செருப்படி யாவன விருப்புறு துவலே
யெழிலவன் வாயது தூய பொற்குடமே,
யதனிற் றங்குநீர் கங்கையின் புனலே
புனற்கிடு மாமணி யவனிரைப்பல்லே
யதற்கிடு தூமல ரவனது நாவே
யப்புனல் விடும்பொழு துரிஞ்சிய மீசைப்
புன்மயிர்க் குசையினும நம்மடிக் கினிதே ; யவன்றலை
தங்கிய சருகிலை தருப்பையிற் பொதிந்த
வங்குலிக் கற்பகத் தலரே அவனுகந்
திட்ட விறைச்சி யெனக்குநன் மாதவ
ரிட்ட நெய்பா லவியே

சேக்கிழார் பாடிய முறையே வேறு

சிவகோசரியார் எலும்பும் இறைச்சியும் சிதறிக் கிடப்பதாகத் தோற்றம் கண்டு, ஒரு வேடன் தான் அநுசிதம் செய்திருக்கவேண்டுமென்று ஊகிக்கிறார். கண்ணப்பர் செருப்பால் நிர்மால்யம் ஒதுக்கினதோ, வாய்நீரா அபிஷேகம் செய்ததோ, தலையிலிருந்து இலை, மலர்களை உதிர்த்ததோ, மாம்ஸத்தை ஊட்டினதோ, சிவகோசரியாருக்குத் தெரியாது. ஈச்வரனிடம் இந்த விவரங்களைச் சொல்ல வில்லை ; ஈச்வரனும் ஒவ்வொரு செயலுக்கும் விளக்கம் சொல்லவில்லை.

ஈச்வரன் கனவில் சொன்னதாக சேக்கிழார் பாடுவது,

அவனுடைய வடிவெல்லாம் நம்பக்கல் அன் பென்றும்
அவனுடைய அறிவெல்லாம் நமையறியுமறி வென்றும்

அவனுடை செயலெல்லாம். நமக்கினியவா மென்றும்
அவனுடைய நிலையிவ்வா றறிநீயென் றருள் செய்வார்.

இந்தச் செய்யுளில் ஈச்வரன் அருளும் வாக்கு
கண்ணப்பர் " அன்பே " வடிவனரென்றும்
அவர் அறிவெலாம் சிவனை யறியும் சிவஞான மென்றும்,
அவருடைய எந்த செயலும் தனக்கு இனிய தென்றும்
மிக மிக உயர்ந்த தன்மையில் இருக்கிறது.

செருப்படி எப்படி யிருந்தது வாய் நீர் எப்படி இருந்தது, தலையிலிருந்து விழுந்த மலர் எப்படி இருந்தது. இறைச்சித் துண்டம் எப்படி யிருந்ததென்றும் ஈச்வரன் விளக்கம் சொன்ன தாகப் பாடவில்லை, இப்படி விளக்கம் சொல்லிக் கொண்டு போவது ஈச்வரனுக்குப் பெருமையில்லை. நக்கீரர் பாடிய விவ ரங்கள் அழகாக வர்ணித்திருக்கிறார் என்று நக்கீரருக்குப் பெருமையளிக்கலாம்; ஈச்வரன் வாக்காக ஸாமான்ய மனிதக் கருத்துகளை அமைப்பது ஈச்வரனுக்குப் பெருமை தாரா.

சிவகோசரியாரும் சிறந்த சிவ பக்தர்; தவமுனிவர்; ஆகம முறைப்படி தினம் தவருமல் பூஜை செய்பவர்; ஈச்வரன் அரு ளுக்குப் பாத்ரமானவர். உண்மையில் கண்ணப்பர் பூஜையைப் பார்த்திருப்பாராகில் அவர் பக்தியுடன் செய்யும் பூஜையைக் கண்டு ஆச்சர்யப்பட்டிருப்பார். நடுக்கம் தெளிந்து வெளியில் வந்து—

அபிவாய : சண்டாள : சிவஇதி வாசம் வதேத்
தேன ஸஹ ஸம்வதேத் தேனஸஹ ஸம்
வஸேத் தேன ஸஹ புஞ்சீத

என்ற மாண்டுக்ய உபநிஷத் வாக்யத்தை யனுஸரித்து, கண்ணப்பரை நமஸ்கரித்திருப்பார்.

பக்தரே, நீர் பக்தியுடன் பூஜை செய்வதைப் மிகவும் பாராட்டுகிறேன். நிர்மால்யத்தை ஒதுக்க இதோ இந்த தர்ப் பைக் கட்டை வைத்துக்கொள்ளுங்கள். அபிஷேக நீர் கொண்டு வருவதற்கு இந்த செப்புக் குடத்தை வைத்துக்கொள்ளுங்கள். மலர்கள் கொண்டுவர இந்தக் குடலையை வைத்துக்கொள்ளுங் கள் என்று மரியாதையாகவே சொல்லியிருப்பார். [செருப்பால் ஒதுக்காதீர் என்று நேர்மொழியாகக்கூட சொல்லியிருக்க மாட்டார்,]

தான் செய்யும் பூஜையில் பக்தி குறைவோ என்றும் மனம் கலங்கியிருப்பார்.

சரித்திரத்தின் பிற்பகுதி வேறு விதமாக அமைந்திருக்கும்.

ஆகவே, திருமறத்தில் நக்கீரர் பாடிய விவரங்களைக் கொண்டு சேக்கிழார் காவ்யத்தை ஆராய வேண்டாம் நாய் விஷயத்தை மாத்திரம் ஒப்புக்கொண்டு, சேக்கிழார் "நாயடி" என்ற பதத்தைப் போட்டதாகவும் அர்த்தம் செய்ய வேண்டாம்.

## அனுபந்தம்-2

நக்கீரர் பாடிய விவரங்களை முறையே அமைத்து யாரோ ஒருவர், தன் மனதில் தோன்றிய வண்ணம்—திருமறத்தில் இல்லாத புதிய கருத்துக்களையும் இணைத்து 5 பாடல்கள் பாடி விட்டார். பிற்காலத்தில் சில பதிப்பாளர்கள் பெரிய புராணத்தில் இந்தப் பாடல்களைத் திணித்தும்விட்டார்கள். [சென்னை சைவ சித்தாந்த மகா சமாஜம் பதிப்பு—பக்கம் 101, செய்யுள்கள் 158-162].

காஞ்சிபுரம் ஸபாபதி முதலியார், ஆறுமுகத் தம்பிரானர், கோவை திரு. ஸி கே· ஸுப்ரமண்ய முதலியார் முதலிய பல வித்வான்கள் இந்தப் பாடல்களை வெள்ளிப் பாடல்களென்று ஒதுக்கி விட்டார்கள்.

(1) செருப்படி யென்னிளம் பருவச் சேவடியிற்
சிறப்புடைத்தால்.

பாலன் முருகன் சிற்றடியைக் காட்டிலும் சிறப்புடைத்து. [கேவலம் எந்த மனிதனும் தன் குழந்தையைப் பற்றிச் சொல்லும் கருத்து].

(2) "ஒரு முனிவன் செவியுமிழு முயர் கங்கை" மிகவும் மட்டமான கருத்து. கங்கை நதிக்கு "முனிவன் செவியுமிழும்" என்ற அடைமொழி எதற்கு? முனிவன் காதுவழியாக வந்ததால்தான் கங்கைக்குப் புனிதம் ஏற்பட்டதா, அல்லது இருந்த புனிதம் அதிகமாயிற்ரு?

அனுபந்நத்தில் இந்தச் செய்யுளுக்குக் குறிப்பு எழுதுகையில் திரு. கே. ஸி. ஸு. முதலியார்

கங்கையிலும் திண்ணனரது வாய் நீர் புனிதமென்ற இந்தப் பாட்டின் கருத்து. 22-ம் செய்யுளில் காண்க". என்று எழுதியிருக்கிருர். கூறியது கூறல் என்றும் குற்றம்பட

சேக்கிழார் பெருமான் அதே கருத்தை மறுபடி வேறு பாடலில் அமைக்க மாட்டாரென்றும், வெள்ளிப் பாடல் என்பதற்கு ஒரு கராணமாக எடுத்துக் காட்டுகிருர் (கோவைத் தமிழ் சங்க வெளியீடு 13 பக்கங்கள் 195, 227)

22-ம் செய்யுளில்

"புண்ணிய கங்கை நீரிற் புனிதமாம் திருவாய் நீர்

இது பெற்ருேர்கள் தம் குழந்தையின் உமிழ் நீரை அனுபவிக்கும் விதம்; நாகன் குழந்தை திண்ணனுரின் வாய் நீரை அனுபவித்தான்.

கண்ணப்பர் செய்த அபிஷேகம் சொல்லுமிடத்தில் இந்தக் கருத்தை சேக்கிழார் அமைக்கவில்லை. அமைக்கவும் மாட்டார் "அன்புமிழ்வார்போல" என்று பாடிய சேக்கிழார் பெருமான் கங்கை நீரென்றும் காவேரி நீரென்றும் பாராட்டமாட்டார் கண்ணப்பரின் அன்பு நீர் is above comparison; is not to be compared with any other river water, however holy it may be considered by mortals.


திருஞான ஸம்பந்தர்


திருநாவுக் கரசர்


ஸுந்தர மூர்த்திகள்


மாணிக்க வாசகர்

---

# சிறுத்தொண்ட நாயனுர்

## (சரித்திரம்)

மேலும் சில குறிப்புகள்

செய்யுள் 11 கணபதீச்சரம் : ஈச்வரன் கணபதீச்வரர் ; அம்மை : திருக்குழல் நன்மாது ; மரம் : திரு ஆத்தி ; தீர்த்தம் ; சூரிய தீர்த்தம் ;

ஊரின் பெயர் : திருச்செங்காட்டங்குடி ; கோயில் பெயர் கணபதீச்வரம்

விநாயகக் கடவுள் கஜமுகா ஸுரனை ஸம்ஹாரம் செய்த போது அஸுரனுடைய ரத்தவெள்ளம் ஓடினபடியால் செங் காட்டங்குடி என்ற பெயர் அமைந்தது. அஸுரனைக் கொன்ற பின் விநாயகரே சிவலிங்கம் பிரதிஷ்டை செய்து பூஜித்தபடி யால் — கணபதிக்கடவுள் பூஜித்த ஈச்வரர் - கணபதீச்வரர், கோயில் பெயர் கணபதீச்வரம்.

(1) திரிபுர ஸம்ஹாரத்துக்குமுன் ஸ்ரீ விஷ்ணு செய்த சிவ பக்த அபசாரம் தோஷம் நீங்குவதற்காகவும்,

(2) பிருகு முனிவர் கொடுத்த சாப நிவர்த்திக்காகவும் திருக்கஞ்சனூர் க்ஷேத்திரத்தில் ஸ்ரீ விஷ்ணு சிவலிங்கம் பிரதிஷ்டை செய்து பூஜித்தார். (பவிஷ்யோத்தர புராணம்)

ராவணனைக் கொன்றதால் பிரம்மஹத்தி தோஷம் நீங்கு வதற்கு ராமர் ராமேச்வரத்தில் சிவலிங்க பிரதிஷ்டை செய்து பூஜித்தார். (அப்பர் - திருநேரிசை - கோடிமா தவங்கள் செய்து).

கும்பகர்ணனைக் கொன்ற பாப நிவர்த்திக்காக திரு ஆனைக் காவில் சிவலிங்க பிரதிஷ்டை செய்து பூஜித்தார். (ஸ்தல புராணம்) இவர்களைப்போல் கணபதிக்கடவுள் அஸுரனைக் கொன்ற தோஷ நிவர்த்திக்காக சிவலிங்கம் பிரதிஷ்டை செய் தார் என்தாக யாரும் நினைத்துவிடக் கூடாது. சாபம், தோஷம், பாபம், ஈச்வர மூர்த்திகளை அணுகமாட்டா. ஈச்வரன் ஈச்வரி, விநாயகர், ஷண்முகர் எல்லோரும் ஒருவரே – (ஈச்வரன்).

சாபமும், பாபமும் விஷ்ணுவாதி பசுக்களைத்தான் பீடிக்கும் பசுக்கள் சிவபூஜை செய்து பாபங்களைப் போக்கிக் கொள்ள வேண்டும் என்பதற்காக விநாயகர் பூஜித்துக் காண்பித்தார்.

செய்யுள் 48 : பசு விழ்த்திட உண்போம் பரமேச்வரனே பைரவ ரூபத்தில் போனபடியால் அவர் வாசகத்தில் உண்மை உள்ளடங்கி யிருப்பதைக் கவனிக்கவும். பசுக்களை ஒடுக்குவார் என்பது குறிப்பு.

பொது : சீராளன் பால், ஈச்வரன் ஐந்து தொழில்களும் புரிவதை நாம் அறிந்து அனுபவிக்கிறோம்.

(1) சீராளர் பிறப்பது — ச்ருஷ்டி

(2) ஐந்து வயது வளர்ந்து சிந்தை மலர செழுங்கலை பயின்றது — ஸ்திதி

(3) ஈச்வரார்ப்பணமானது ஒடுக்கம்

(4) பாகமான பதார்த்தங்கள்
இலையினின்றும் மறைந்தது ;
பைரவரும் மறைந்தருள்வது திரோபவம்

(5) சீராளர் பிழைத்து வருவது ;
ஈச்வரன் மலைபயந்த தைய
லோடும், சரவணத் தனயரோடும்
ரிஷபாரூடராகக் காக்ஷி
கொடுத்து, எல்லாரையும் —
என்றும் பிரியாதே இறைஞ்சி நிற்க
உடன் கொண்டு ஏகினது — அனுக்ரஹம்

ஆதி சங்கர பகவத் பாதாள் அருளிய சுவானந்த லஹரியைத் தழுவி

# சிவபக்தி

எழுதியவர் :

## திருவையாறு அண்ணுஸ்வாமி சிரௌதிகள்

(1) அங்கோலம் (2) மா கச்ச (3) ஸஹஸ்ரம் வர்த்தந்தே
(4) ஹம்ஸ: பத்மவனம் (5) ஜனனம்ருதியுதானும்
(6) யதா புத்தி: சுக்தௌ (7) மனஸ்தே பாதாப்ஜே
(8) ஸா ரஸஞ (9) ஸாரூப்யம் (10) பாணத்வம்
(11) மார்க்காவர்த்தித (12) நரத்வம் தேவத்வம்

12 ச்லோகங்களுக்கு வியாக்யானமும், அவைகளில் அமைந்துள்ள சைவஸித்தாந்தக் கருத்துக்களின் விளக்கமும் கொண்டது. வெறும் பதவுரையாக இல்லாமல் விசேஷ தாத்பர்யங்களுடன் கூடியது வேத தேவார ஆதாரங்களும் சில இடங்களில் காட்டப்பட்டிருக்கின்றன. ஆசார்ய பக்தர்களும் சிவ பக்தர்களும் அவசியம் படித்துணர்ந்து சிவ பக்தியில் ஈடுபட்டு ஜன்ம ஸாபல்யமடைய வேண்டும்.

ஸம்ஸ்க்ருதம் பழக்கமில்லாதவர்களும் தமிழ் விரிவுரையைப் படித்தே விஷயங்களை நன்ருக அறிந்து அனுபவிக்கலாம்.

6 படங்கள் கொண்டது – விலை ரூ. 2.

5 புத்தகங்களுக்கு ரூ. 10 அனுப்பினுல் – ரிஜிஸ்டர்டு தபாலில் அனுப்பப்படும்.

தி. வி. அண்ணுஸ்வாமி சிரௌதி
N. R. 22-A, ஏர்போர்ட் க்வார்ட்டர்ஸ்
மீனம்பாக்கம், சென்னை - 27.

## சிவ பஜனும்ருதம்

முதல் பாகம் : சிவபஜனை, மூர்த்திகள் தியானம் ஈச்வர ஆஹ்வானம்; பூஜை. உபசாரம். திவ்ய நாமம்; பக்தர்கள் பரஸ்பர பாத சேவை ரூ 2-00

2 ம் பாகம் : மீனுக்ஷி கல்யாணம், ஸுந்தரேசர் பவனி திருக்கல்யாணம்; வஸந்த கேளிக்கை; டோலோத்ஸவம்; திருப்பள்ளியறை; ஈச்வர அனுக்ரஹ லீலைகள்; திருவடி தரிசனம்; ஆனந்த நர்த்தனம் திருப்பள்ளி யெழுச்சி. ரூ. 2-00

அனுபந்தங்கள் ரூ 0-25

தபால் செலவு (ரிஜிஸ்ட்ரேஷன் உள்பட) 1-00

சிவபஜனை ரீதியாக மீனுக்ஷிகல்யாண மஹோத்ஸவம் நடத்தி அனுபவிக்கலாம்

---

## "சிவகவச" சால்வைகள்

கதர் சால்வைகளில் கீழே குறித்த விதங்களில் தமிழ் எழுத்துக்களில், நாகர எழுத்துக்களில், தமிழ் நாகரம் இரண்டும் கலந்தவிதம் அன்பர்கள் இஷ்டம் போல் அச்சடித்துக் கொடுக்கப்படும்.

5 முழம் x $2\frac{1}{2}$ முழம் ரூ. 8-00
4 முழம் x $2\frac{1}{2}$ முழம் ரூ. 5-50

"வடமொழியும் தென்தமிழும் மறைகள் நான்கும் ஆனவன்காண்" என்பது அப்பர் ஸ்வாமிகள் திருவாக்கு. பஞ்சாக்ஷரமோ, ஹர, சிவ நாமாக்களோ, வடமொழி தென்தமிழ் இருமொழிகளிலும் கலந்து அச்சடித்துக்கொள்வது உசிதம்.

தி. வி. அண்ணுஸ்வாமி சிரௌதி
என். ஆர். 22-ஏ, விமானநிலய விடுதிகள்
மீனம்பாக்கம், சென்னை-27.

உ

|| ஓம் நம : சிவாய ||

|| ஓம் நமோ பகவதே ஹரதத்தாய ||




ஸ்ரீ ஹரதத்தர் சிவலிங்க பூஜை

## ஸ்ரீ ஹரதத்தர் பக்த ஜனஸபை வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| 1. | ஸ்ரீ ஹரதத்தர் சரித்திரம் (சுருக்கம்) | 0—65 |
| 2. | ஸ்ரீ ஹரதத்தர் சிவலிங்க பூஜை (வர்ணப்படம்) | 1—50 |
| 3. | நவரத்ன மாலை | 0—25 |
| 4. | பூஜா கல்ப்பம் | 0—30 |
| 5. | சுருதிஸூக்திமாலை (நாகரம்) மூலம் மாத்திரம் | 0—40 |
| 6. | சிவ பஜனும்ருதம் | |
| | முதல் பாகம் சிவபஜனை, திவ்ய நாமம் | 2—00 |
| | இரண்டாம் பாகம் —மீனுக்ஷிகல்யாணம் | 2—00 |
| | அனுபந்தங்கள் | 0—25 |
| 7. | சிவ கவச சால்வைகள் (கதர்) ஹர சிவ நாமங்கள் பஞ்சாக்ஷரம் அச்சடித்தவை | |
| | 5 முழம் X $2\frac{1}{2}$ முழம் | 8—00 |
| | 4 முழம் X 2 முழம் | 5—50 |
| 8. | மீனுக்ஷியம்மன் ஸ்துதி (தசச் லோகீ) நாகரம் கவிச்ரேஷ்டர் ஸ்ரீ ராமச்சந்திர அய்யர் பாடியது | 0—05 |
| 9. | கௌரி கல்யாணம் முதலிய சில பாடல்கள் | 0—05 |
| 10. | சிவபரத்வம் (இரண்டாம் பதிப்பு) | 0—15 |
| 11. | சிவ பக்தி (சிவானந்த) லஹரியைத் தழுவி) | 2—00 |

தபால் சார்ஜு பிரத்தியேகம்

கிடைக்குமிடம் :

தி. வி. அண்ணுஸ்வாமி சிரௌதி

பணியாளர், ஸ்ரீ ஹரதத்தர் பக்த ஜன ஸபை
சென்னை விலாசம் :—N. R. 22-A, ஏர்போர்ட் க்வார்ட்டர்ஸ்
மீனம்பாக்கம், சென்னை – 27.

— 0 —

### அறிவிப்பு

திருநீலகண்ட நாயனுர் சண்டேச்வர நாயனுர் காரைக்கால் அம்மையார், அப்பூதியடிகள் புராணக் குறிப்புகள் காலக்கிரமத்தில் வெளிவரும். ஒவ்வொரு வெளியீடும் 16 பக்கங்களாக வெளிவரும் யாரேனும் அன்பர் சிவகைங்கர்யமாக ரூ. 108 பணம் உதவினுல் அன்னுரின் உபகார வெளியீடு என்பதாகப் பிரசுரம் செய்யப்படும்

தி. வி. அ. சிரௌதி